495

# எல்லாம் நானே



702

இதை

எழுதி ப்ரசுரித்தது

ரமணதாஸன்

கா. சு. சேஷகிரி




இரண்டாம் பதிப்பு

Acc. No. 45585

138, ப்ராடீஸ் ரோட், மயிலாப்பூர்

சென்னை

1933

*All Rights Reserved*] [விலை 2 அணா

91/1

ஓம்

ஸ்ரீ ரமண பரமாத்மனே நமஹ

# எல்லாம் நானே

மூன்று வயது பிள்ளைக்கு நூறுவயது கிழவியைக் கல்யாணம் செய்வதுபோலும், தவளை ஒரு பாம்பைக் கொன்று விழுங்குதல்போலும், நேற்றுப் பிறந்தவன் நாளைக்குப் பிறக்கப் போகிறவனுடன் முந்தாநாள் சண்டையிட்டதுபோலும் இயற்கைக்கு விரோதமானதும் சிறிதும் பொருந்தாததுமான "எல்லாம் நானே" என்னும் வாக்யத்தை எப்படி நம்புவது? 'ஸர்வமும் நானே ஆனால், புலி கரடி சிங்கம் யானை எருமை கழுகு காக்கை ஈ எறும்பு மச்சம் முதலை மரம் செடி மனிதர் தேவர் முதலிய யாவும் மாயையா? அப்படியானால் புலி பாம்பு என்று பேதம் பாராட்டி பயப்படுவதேன்? ஸர்வத்திலுமுள்ள நான் இத்தனி உடம்பிலுமுள்ள என்னையே ஹிம்ஸிப்பதற்கு என்ன காரணம்? என்று வினவும் அன்பர்காள்!

ஸமுத்ரத்தின் அளவு கிணற்றுத்தவளைக்குத் தெரியுமா? மேருவின் உயரத்தை ஒரு சிறு புழு அறியுமா? தன் கணவனுடன் ஸுகித்திருக்கும் யௌவன ஸ்த்ரீயின் நிலைமையை ஐந்து வயது குமரி அறிவளோ? கற்கண்டின் ருசியைப்பற்றி எவ்வளவு ப்ரஸங்கித்தாலும் அதனை உண்ணுதவன் உணர்வனு? A B C அறியாதவன் M. A. பரீக்ஷையில் ஜயிப்பனு? தேஹாபிமானம் நீங்காதவன் ஆத்ம ஞானம் அடைதல் எங்ஙனம்? இன்றோ நாளையோ

அல்லது வெகு சீக்கிரத்திலோ மரிக்கும் இத் தேஹத்தையே சாச்வதமாய் நினைக்கும் நீவிர் ஸர்வத்திலும் நிறைந்த ஏக பராபரப்பொருளை அறிவதெப்படி?

இந்நிலவுலகினின்று $9\frac{1}{4}$ கோடி மைல்களுக்கப்பாலிருந்து நமக்கு வேண்டிய உஷ்ணமும் ஒளியும்கொடுக்கும் ஸூர்யன், சற்றேறக்குறைய 20 கோடி சதுர மைல் விஸ்தீரணமுள்ள நமது பூமியைவிட 13 லக்ஷம் மடங்கு பெரியதாகவும், இப்புவனத்தைப்போன்ற க்ரஹங்கள் பல தன்னைச் சுற்றிவரத் தான் நடுவிலிருப்பதையும், அறியாத உங்களில் அநேகர் ஆதித்யனே இத்தரணியைச் சுற்றி வருவதாகவும், இம்மேதினியை விட அந்த ரவியானது பலமடங்கு சிறியதென்றும் நினைத்து வரவில்லையா? அகண்ட வெளியில்காணும் கோடிக்கணக்கான நக்ஷத்ரங்களில் அனேகம், நம்மைச் சுட்டெரித்தும் ப்ரகாசம் கொடுத்தும்வரும் பானுவினும் பெரியவைகளா யிருக்கையில், அவற்றை மின்மினிப்பூச்சிக்கு ஸமமாகக் கருதவில்லையா? அவை ஒவ்வொன்றினையும் சூழ்ந்து ப்ரதக்ஷணம் செய்துவரும் க்ரஹங்கள்—(அவற்றில் இப்பூமியினும் பன்மடங்கு பெரிதாயிருப்பன எண்ணிறந்தவை)—ஆங்காங்குள்ள ஜீவகோடிகள் முதலிய அனைத்தையும் ஆக்கி அளித்துத் துடைக்கும் முழுமுதற்பொருளை அறிதல் அல்ப மனிதனுக் கெளிதோ? அணுமுதல் அண்டகோடிகள் வரையில் உள்ள ஸர்வத்திலும் நிறைந்த அளவுக்கடங்காத ஜோதியை மனோவாக்கினால் அறியத் தரமோ? தன்னைச் சூழ்ந்திருக்கும் கண்ணாடிகளின் நிறத்திற்கேற்றபடி சிவப்பு, மஞ்சள், பச்சை, ஊதாவாகக் காணப்பட்டாலும் உள் ஒளிக்கும் தீபம் ஒன்றே யன்றோ! திருவிழாக்காலங்களில் வெளிவரும் பூதப் பொம்மைகள் தாமே நடந்து வருவதாய்த் தோன்றினாலும் அவற்றை உண்மையில்

இயக்கி வருவது உள்ளிருக்கும் ஆறடி மானிடனல்லவோ? தேஹ பேதங்கள் லக்ஷமிருப்பினும், ஸர்வ சரீரங்களின் உள்ளும் ஒட்டியும் ஒட்டாமலு மிருந்து அவற்றின் ஆட்டத்திற் கேதுவாயிருப்பது ஆத்மாவேயன்றோ! ச்ருதி போதம், குருமொழி, யுக்தி, அனுபவம் இவற்றால் படிப் படியாய் ஐயந்திரிபற உணரவேண்டிய அதி உன்னத நிலையை, கடலைத் தாண்டக்கருதிய காகம்போலவும் மேருவின் சிகரம் ஏற நினைத்த முடவன் போலவும், மண்பெண்ணுதியாம் ஆசைகளை அகற்றுமலே அடையக் கருதுவது அறிவீனம்.

"ஸர்வம் ப்ரஹ்ம மயம் ஜகத்," "அவனன்றி ஓர் அணுவும் அசையாது," "அஹம் ப்ரமாஸ்மி மந்த்ரோயம் த்வைத துக்கம் விநசயேத்," என்பது போன்ற அற்புத வாக்யங்களை அனவரதமும் கேட்கும் யாம், தேஹ தார ஸுதாதிகளின் ஆசையை அடியோடு அறுத்தாலன்றோ, நீ நான் அவன் அவள் அஃது எனும் விகற்பங்கள் யாவும் ஏக வஸ்துவையே குறிப்பதை அறிவோம்? மோதியடிக்கும் மாயாமருதங்களால் சிறிதேனும கலங்காத சித்தக் கடலில், வ்ருத்தி என்னும் அலைகள் அசைவுகள் ஒன்றேனும் இன்றியிருக்கும் நிலையில்தான், ஆத்மாவின் இயல்பை அறியலாகும். சித்த வ்ருத்தியே ஸகல துக்க ஹேதுவாதலால் ஸர்வவ்ருத்திகளையும் ஒழிக்க, "ப்ரஹ்மை வாஹம்" என்னும் உறுதியான ஒரே நிலையில் கனவிலும் நனவிலும் நின்று மனதைவென்று, ஆத்ம பர ஐக்ய பூர்ண அனுபவத்தை நன்றுயறிந்து "ஸர்வமும் நானே" என்று ப்ரத்யக்ஷமாய் உணர்கையில், தேசம் காலம் திக்கு தேவர் மனிதர் ம்ருகம் ஆதி பேதங்களுக் கிடமேது? "ஜீவாத்ம பரமாத்மாக்களில் அணுமாத்ர பேதம்பார்க்கும் மூடன் பீதி அடைவான்" என்ற ச்ருதி வாக்யத்தை மறந்து

சவமய சரீரத்தின் அபிமானம் மிகுந்து, நாலா பக்கத்தி லும் நிலைக்கண்ணுடிகள் ஆயிரக்கணக்காய்ப் பதித்துள்ள ஓர் அலங்காரமண்டபத்தில் புகுந்ததும் தன்னைப்போன்ற நாய்கள் அனேகம் அக்கண்ணுடிகளில்தோன்றி எதிர்க்க வருவதாய் நினைத்த திகிலினுல் உயிரிழந்த ஓர் நாயைப் போலவே மதியிழக்கும் நேசர்காள்! சாபத்தால் வராஹ உருவமெடுத்த இந்திரனை தேவர்கள் அணுகி, 'புரந்தர ணுகிய நீ இப்பன்றி யுடல்விட்டு விண்ணுலகம் வரவேண் டும்' என்று கெஞ்சியும், தன் குட்டிகள்மீதும் ப்ராணன் மீதும் உள்ள ஆசையால் அச்சமயம் பன்றி ஜன்மமே ச்ரேஷ்டமென நினைத்த தேவராஜன்போலவும், தாய்ச் சிங்கம் இறக்கவே நரிகளுடன் வளர்க்கப்பட்டுத் தானும் ஓர் நரியே என்று வெகுநாள் நினைத்திருந்ததால், யானை யாதியாம் ம்ருகங்களைக் காண்கையில் பாய்ந்து கொல்லக் கருத்தும் உற்சாகமும் பிறப்பினும், நரிக்கூட்டங்களுடன் கூடி யோடிவிடும் வழக்கம் கொண்ட சிங்கக்குட்டிபோல வும், தன் கனவில் ராஜ்யத்துடன் மனைவி மக்களையு மிழந்து பிறர்க் கடிமையாக்கப்பட்டுத் தான் ஒருகால் அரசனுயிருந்த ஸ்திதியையும் முற்றிலும் மறக்கும்படி யான அவ்வளவு கஷ்டநிலையை அடைந்து வருந்திய வேந்தன்போல்வும், பிராந்தி கற்பித மித்யா ஜகத்தை மெய்யாக நம்பி, சாயாசரீரம் ப்ரதிபிம்ப தேஹம் ஸ்வப்ன உடம்பு மனேராஜ்ய உடல் இவைகளேபோன்ற இவ் வநித்ய வாக்கையை சாச்வதமாகக் கருதி, நிர்நாம நிரூப நிர்க்குண நிர்ப்பேத நிர்விகார நிச்சல நித்ய நிஷ்கள நிரஞ்ஜன நிருபம நிர்விகற்ப நித்யமுக்த அவ்யய அனுதி பரிசுத்த பராத்பர ப்ரத்யக் அகண்ட பரிபூர்ண ஸத்ய ஞான கன அனந்த ஆனந்த ஏகரஸ ப்ரஹ்மமாகிய தன்னை மறத்தலினும் கேவலமான அஞ்ஞானமுண்டோ? (தங்கம்,

வெள்ளி, தாமிரம், பித்தளை, ஈயம், இரும்பு, மண் ஆதி யாம் வெவ்வேறு வஸ்துக்களால் ஆக்கப்பட்ட) லக்ஷக் கணக்கான நீர்க்குடங்களிலும் ப்ரதிபிம்பித்து விளங்கும் ஸூர்யன் உண்மையில் ஒருவனேபோல, எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்த் தோன்றி நிற்கும் ஏகபராபரப் பொருளை, நீ நான் அவன் அவள் அது இது வெனப் பிரித்துக்கூறல் சித்தவ்ருத்தியால் விளைந்த விபத்தன்றோ! புத்திதோஷத்தால் பிறக்கும் இக்கற்பனு விகற்பங்கள் சமாதி நிலையில் தோன்றாதிருப்பதால், இடைவிடாது குளவியை த்யானித்துக் குளவியாகவே மாறும் புழுவைப்போல, ஸதா சமாதிநிஷ்டனாயிருப்பவன் ஸர்வ உபாதிகளையும் கடந்து ப்ரஹ்மானுசந்தான பலத்தால் பரமாத்ம ஸ்வரூபமேயாகிறான். கானல் நீர், நீர்மேற் குமிழி, ஆகாயத்தில் நீலநிறம், கண்ணாடியில் முகம், பழுதையிற் பாம்பு, கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் கள்வன், எஃகில் வாள், மரத்தில் பொம்மை, தங்கத்தில் ஆபரணம், களிமண்ணில் பானைபோலவே காணும் அகில ப்ரபஞ்சமும் அதிஷ்டான ப்ரஹ்மத்தினும் வேறல்ல என்பதை அறிந்து, “ஆகாச ஸமானமாய், ஸமான ரஹிதமாய், ப்ரக்ருதி (காரணம்) விக்ருதி (காரியம்) அற்றதாய், பாவனாதீதமாய், வேதாந்த ப்ரமாணத்தால் வித்திப்பதாய், ஹ்ருதயத்தில் ஆவிர்ப்பவிப்பதாய், ஸதா ‘அஹம்’ என்னும் அனுபவஸ்வரூபமாய் ஜன்ம ஜரா மரண சூன்யமாய், சாச்வதமாய், சாந்தமாய், ஸமரஸமாய், எல்லையற்ற அபாரமாய், நிஸ்தரங்க ஸமுத்ரம்போல் நிறைந்துள்ள ஏக பரிபூர்ண பிரஹ்மமே நான்; நிர்மல, நிஷ்க்ரிய, நிர் விசேஷ, நிராகார, ஸர்வாத்மக, ஸச்சிதானந்த, அத்வைத ப்ரஹ்மம் நானே” என்னும் “அகண்ட ப்ரஹ்மாத்மைக்ய வ்ருத்திஞானத்தை, இத்தேஹத்தில்

அஹம் புத்தி இல்லா தொழியுமளவும் ஸ்வப்னம்போல் இஜ்ஜீவ ஜகத்தோற்றம் விளங்கும்வரையிலும், ஸதாகாலமும் அப்யஸிப்பதால் மனம் நாசமுற, அதனுல் ஹ்ருதயத்துள்ள அனுத்ம பாஹ்ய வாஸனைகள் நிச்சேஷமாய் நீங்கவே, அவ்வாஸனு ஜாலத்தால் மறைபட்டதுபோலிருந்த பரம ஆத்மானுபூதியும் பிரதிபந்தமின்றி சந்தன கந்தம்போல நிர்மலமாய், ஸ்வயமே ப்ரகாசிக்கும்''.

ஸூர்யனது கதிர் அக்னியின் பொறி கடலில் அலை போலவே ப்ரஹ்மத்தில் ஜீவன் இருப்பதை அறியும் ஞானி, தேஹ வாஸனை யற்று பேத சிந்தனை யிறந்து ஸர்வத்திலும் தன்னையே காண்பதால், பிற உயிர்களால் எவ்வித தீமையும் அடையமுடியாது. ஸாதுக்களைக் கண்ட மாத்திரத்தில் மூர்க்கர்களும் சாந்தமூர்த்திகளாய் மாறுகையில், ஸர்வமும் துறந்து ஸச்சிதானந்த ப்ரஹ்ம மாத்ரமாய் நிற்கும் ஞானியின் அருகில், பசுவும் புலியும், பூனையும் எலியும், கீரியும் பாம்பும் விரோதமின்றிக் கொஞ்சி விளையாடுதலும் ஓர் அதிசயமோ? அதிமூர்க்கமான ம்ருகங்களும் மஹாத்ம ஸன்னிதியில் (அரசனிடம் வரும் குற்றவாளிபோல) தமது ஸ்வபாவ தீயகுணமிழந்து தீங்கு புரியாமல் இருப்பது, ஐக்ய பாவ மறிந்த ஞானியின் அருட் ப்ரபையாலேயே யன்ருே! கதிரவனைக் கோட்டான் நோக்குமா? கருடனை ஸர்ப்பம் தீண்டுமா? குல ஸ்திரீயைக் கெடுக்க நினைக்கும் பாதகன் உய்வனு? தமயந்தியைத் தீயசிந்தையுடன் தொட்ட வேடன் எரிந்து சாம்பலாக வில்லையா! ஸூர்யனைவிட ப்ரகாசமும் வலிமையும் மிக்க "அஹிம்ஸா" சக்கரம் சூழப்பெற்ற ஞானியை அணுகும் (ரோஷமும் விஷமும் மிகுந்த) எந்தப்ராணியும் யாதொரு தீங்கும் இயற்றமுடியாது. முன்னொருகால், கண், காது, கை, கால், வாய், மூக்கு முதலியன ஒன்று

கூடி, ஒருவேலையும் செய்யாமல் நடுவேயிருந்து தமது கஷ்டார்ஜிதத்தால் பிழைத்துவரும் வயிற்றின்மேல் கோபம்கொண்டு அதனைப் பட்டினிபோடவே தாங்களும் வலியழிந்து வாடுவதைக்கண்டு தாம் வேறு உடல் வேறன்றெனத் தெளிந்தவாறுபோல, ஸர்வ ஜீவர்களிலும் உள்ள ஏக மூர்த்தி " தானே " என்றறியாத மனிதர், ம்ருகங்கள், ஏகாத்ம ஞானம்பெற்ற மஹான்களை அடைந்தபோது பல்லைப்பிடுங்கின பாம்புபோல் தமது துர்க்குணங்கள் ஒடுங்கப்பெற்று, பதியைத்தொழும் குலஸ்த்ரீபோலவும் குழந்தையை நேசிக்கும் தாயைப்போலவும், குரு ஸன்னிதானத்தில் உள்ள ஸர்வாத்மாக்களையும் தானே யாகப் பாவிக்கக் காண்பதில்லையா? தமது தேஹத்தின்மேல் மேய்ந்துகொண்டிருந்த எண்ணிறந்த புழுக்களுக்குத் தாம் உயிர்த்துள்ளபோதே உடலை ஆகாரமாக விட்டவோர் மஹாத்மாவுக்குச் சரீராபிமானம் எள்ளளவேனும் இருந்திருக்குமா? கண் மலரிற் கைபடுவதுபோல் ப்ராரப்த வசமாகப் பாம்பு புலியாதிகளால் யாதாயினும் அபாயம் நேரிடினும் ஞானிக்கு ஒருபோதும் ஹானியில்லை. சாபம் நீங்கப்பெற்ற இந்திரன் பழய பன்றியாயிருக்க ப்ரியப்படுவனு? "ஜலத்தில் விளங்கும் நம்மிருவர் சாயையும் ஒரே விதமாய் இருப்பதால், நீ நரியல்ல என்னைப்போலொரு சிங்கமே யாவாய்" என்று ஓர் மிருகேந்த்ரனுல் போதிக்கப்பெற்ற சிங்கக்குட்டி நரிகளுடன் சேருமா? கனவில் அதிபயங்கரமான கஷ்டங்களை அடைந்த வேந்தன் துயில் நீங்கியதும் துக்கப்படுவனு? கல்பாந்த காலத்தில் ஹிமய மலையின் சிகரமளவும் ஜலமயமாய் முடிகையில், கிணறு, குட்டை, நதி, குளம், ஏரி, கடல், ஸமுத்ரம், மலை என்னும் பேதங்கள் ஏதேனும் தோன்றுமா? ஓர் மலைச்சிகரமீதேறிக் கீழ்நோக்கிப் பார்க்கையில், மிகவும் நீண்டுயர்ந்த

ஓர் தென்னைமரத்துக்கும் இடிந்துவிழுந்த குட்டிச்சுவருக்கும் வித்யாஸம் தெரியுமா? குருவருளால் ஆத்மஞானம் அடையப்பெறும் முமுக்ஷு இழிவும் அழிவும் பொருந்திய ஸப்த தாதுக்களால் ஆகிய சோற்றுலெடுத்த சுவரையே சாச்வதமாகக் கருதுவனு?

இந்நாமரூப ப்ரபஞ்சத்தில் தோன்றுபவை அனைத்தும் மறைவனவே. மறைந்தன மறுபடியும் தோன்றுபவைகளே. பிறப்பும் இறப்பும் ஸர்வ வஸ்துக்களுக்கும் மாறி மாறிவரும். அமைப்பு அழிவு அற்றபொருள் ஆத்மா வொன்றே. அவன் அவள் அது எனும் நிலைமைகளைக் கடந்ததும் மனோவாக்குகளால் அறியப்படாததுமான ஆத்மா "நானே". ஸர்வலோக சகல ஜீவர்களுக்குள்ளும் புறமும் இருந்தியக்கும் கர்த்தா நானே. சிதானந்தமூர்த்தியாகிய நான், எனது சாயைபோன்ற மாயையின் சக்தியால் வெவ்வேறுகத் தோற்றப்படும் கோடிக்கணக்கான லோகங்களுக்கும், ஆதாரமா யிருப்பதாலன்றோ இச்சர்வமும் ஸத்யம்போல் காண்கிறது! என்னலன்றிக் காற்று வீசுமோ? ரவி ப்ரகாசிக்குமோ? ஸமுத்ரம் கரை புரளாது நிற்குமோ? அண்டகோடிகள் ஒன்றோடொன்று தாக்கி அழிவுறுமல் அகண்ட வெளியில் ஆங்காங்கு நிலைக்குமோ? அது இது, அங்கு இங்கு, அன்று இன்று என்னும் பேதம் என்னிடமேது? அணு மஹத், காலம் தேசம், காரணம் காரியம் என்னும் பதங்களுக்குப் பொருளேது? எங்கும் நிறைந்து எப்பொழுதுமுள்ள தன்னந் தனிப்பொருளாகிய என்னையன்றி யோர் பொருளு முளதோ? ஊரில் உள்ள வீடுகள் ஒவ்வொன்றிலும் ப்ரகாசிக்கும் சந்திரன் வெவ்வேறு? "அண்ணு, தம்பீ, குழந்தாய், நாதா, அப்பா, தாதா" என்று பலர் பலவிதமாய் ஒரே மனிதனை அழைப்பதில்லையா? ப்ரா

ணன் போனதும் இம்மாயா உறவுகள் மறைந்து விடுவ தில்லையா! வெவ்வேறுவிதமான பெயரும் உருவமும் பெற்ற நகைகள் பல, ஒரே தங்கத்தால் அமைக்கப்பட வில்லையா? அவ்வுருவங்களை அழித்ததும் அவை பழய தங்கமே யாகவில்லையா? அஸ்தி, பாதி, ப்ரியம், நாமம், ரூபம் என்னும் ஐந்து அம்சங்களில் முந்தியது மூன்றுமே ஸ்வரூபமாகவுள்ள ப்ரஹ்மமாகிய என்னிலும் வேறாகாத அனாதி அற்புத மாயையானது, ஸூர்யக்ரணங்களால் உண்டாகும் மேகக்கூட்டங்கள் அச்சூர்யனையே மறைத் துப் படர்ந்து பெருகுவதுபோல, ஸச்சிதானந்த மூர்த்தி யாகிய என்னையே, தனது ஆவரண (மறைப்பு) விக்ஷேப (விரிவு) சக்திகளால் மயங்கச்செய்து ஒருவனாகிய என் னையே பலவாகக்காட்டி அனித்ய தேஹத்திலாசையூட்டி கயிற்றை ஸர்ப்பமாகக் கருதுவதுபோன்ற ப்ராந்தி மோஹத்தில் மாட்டி வைத்திருப்பது ஆச்சரியத்திலும் ஆச்சர்யம் அல்லவா! பாசிப்படலத்தைத்தள்ளிச் சுத்த ஜலம் அருந்தும் புருஷன்போல், அஞ்ஞான கற்பித நாமரூபாதிகளை நீக்கிச் சிதானந்தரூபியாகிய என்னையே எங்கெங்கும் ஏகனாய் ஸ்வயம்புவாய்க் காண்கையில், "ஸர்வம், காலம், பேதம்" என்னும் பதங்களுக் குயி ரேது? அலங்காரமண்டபத்தில் பதித்துள்ள ஆயிரக்கணக் கான கண்ணாடிகளிலும் என்முகத் தோற்றமே விளங்கு வதுபோல, புலி, கரடி, ஓனாய், நரி, சிங்கம், யானை, எருமை, எறும்பு, ஈ, புழு, பூச்சி, புல், பூண்டு, செடி, கொடி, வ்ருக்ஷம், பக்ஷி, மனிதர், தேவர் முதலிய (வெவ் வேறாகத்தோன்றும்) ஸர்வ ப்ராணிகளுக்குள்ளும் உள் ளது, ஸத்ய, க்ஞான, ஆனந்த, ஏகரஸ, நித்ய, நிரந்தர, ஸ்வத சித்த, சுத்த, ப்ரத்யக்கபின்ன ப்ரஹ்மமாகிய என் னுடைய ப்ரதி பிம்பமேயன்றோ! கண்ணாடிகளின் உருவம்

சுத்தம் (அழுக்கற்றதன்மை) இவற்றிற் கேற்றபடி, முகத் தோற்றம் ஒரேசமயத்தில் சிலவற்றில் சிறிது பேதப்பட்டுக் காண்பதுபோல், ஸர்வஸாக்ஷியாகிய ஆத்மாவின் ப்ரதிபிம்பமும், அவித்யா காமகர்மாதிரூபமான பாசபந்தத்தால் எடுக்கும் தேஹகோடிகளில் குறைந்தும் மிகுந்தும் உள்ள அறிவு சக்திகளுக்குத் தக்கபடி வெவ்வேறு ஜீவராசிகளாகக் கூறப்பட்டாலும், இவையனைத்தும் ஸ்வப்ன ஜகம்போல மித்தையேயாகும். ஆனால் நாடகசாலையில் ராஜா வேஷம்போட்டவனே திருடவேஷமும் தரிக்க நேரிடினும் வேஷங்களுக்குத்தக்கவாறு அவ்வவ்வேளைகளில் நடிப்பதுபோலவும், துயில் நீங்கி எழுந்த பிறகு "கனவு பொய், கனவில் கண்ட யாவும் நானே" என்றறிந்தபோதிலும், ஸ்வப்னவஸ்தையி லிருக்கையில் தோன்றும் ஸர்வமும் தன்னினும் வேறு என்றே எண்ணியிருத்தல்போலும், மாயா கற்பித ஸம்ஸாரஸாகரமாகிய கானல் நீரால் ப்ரமித்திருக்குமளவும் பாம்பு, புலி, பூனை, எலி, எறும்பு, ஈ, மசகம், மச்சம், பக்ஷி, வ்ருக்ஷம், செடி, கொடி, மனிதர், தேவர், த்வைதவாதி, அத்வைதவாதி, ஆஸ்திகன், நாஸ்திகன், வெள்ளையன், வேறுநிறத்தவன், ம்லேச்சன், இந்தியன், அமெரிக்கன், நீகிரோவன், ஆண், பெண், அலி என்னும் ஸர்வபேதங்களையும் உண்மையாகவும் சாச்வதமாகவும் பாவித்திருப்பது ஸஹஜமேயன்றோ! குருவி, காக்கை, கிளி, புலி, பூனை, நாய் முதலிய பக்ஷி ம்ருகாதிகளைப்போலவே கூக்குரலிடும் திறமைவாய்ந்த மனிதன் அவ்வித சக்திகளை உடைமைபற்றி (ஒருவனேயன்றி) வெவ்வேறாகக் கருதப்படுவனா? தன்னருகில் வைக்கப்பட்டிருக்கும் மஞ்சள், சிகப்பு, பச்சை, ஊதா ஆகிய எந்தப் பொருட்களின் நிறத்தையும் உள்ளபடியே ப்ரதி பிம்பித்துக்காட்டும் ஸ்படிகக்கல் ஒன்றா பலவா?

ஸஹாதேவனைச் சோதிக்கும்பொருட்டு ஆயிரம் ரூபம் கொண்ட ஸ்ரீக்ருஷ்ண பகவான் ஒருத்தரா பலரா? ருசி கரம், த்ரவத்வம், சைத்யம் இவற்றையுடைய நுரை குமிழி அலையாதிகள் அனைத்தும் ஸமுத்ரமே யாதல்போலும், குயவன் வீட்டுச் சட்டிபானை, குடம் ஜாடி, கிண்ணங்கள் பாத்ரங்கள் பற்பலவிதமாய்ச் செய்யப்பட்டிருப்பினும் ஒரே மண்ணால் ஆக்கப்பட்டதுபோலும், விளக்கின் ஒளி யால் ப்ராந்தி யொழிந்து கயிறு (ஸர்ப்பமல்லாது) கயிறாகவே யிருக்கக்காண்பதுபோல் ஜகமனைத்தும் ஆத்மாவினும் பின்னமாகாது ப்ரக்ருதி விலக்ஷண அச்சத்ரூப ஆத்மாவாகவே யிருப்பதைக் காண்கையில், அவித்யாந்தகாரத்தால் உண்டான ஸமஸ்த விகற்பங்களுக்கு மிடமேது? சப்தாதி பாஹ்ய விஷயங்கள், ச்ரோத்ராதி இந்த்ரியங்கள், மனம் இவற்றைத்தானுகிற ஞானாத்மாவில் ப்ரவிலாபித்து நிர்விகற்ப சமாதி அடைந்தவர், மாயா மயக்கத்தில் ஆழ்ந்தவர்போல நீ நான் அது, இது, அவன், அவள், உள், வெளி, கீழ், மேல், ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன், இந்திரன், தேவர், மனிதர் ஆதியாம் பேதங்களை அறிவரோ? அதியற்புதமான இவ்வானந்த ஸாகரத்தில் கலக்கையில் இம்மாயப்ரபஞ்சமும் அஞ்ஞானகற்பித தேஹ இந்த்ரிய மனப்ராண அஹங்காராதிகளும் சூரியன் முன் இருள் போல் அழிந்து, எல்லையற்ற நிரந்தர கேவல அகண்ட பரிபூர்ண ஸத்ய, நித்ய சுத்த புத்த முக்த பரமானந்த ஏக ரஸ அத்விதீய ப்ரஹ்மமே யாவதால், ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளேது, தேஹ தார ஸுதாதி யபிமானமேது, செய்யும் கர்மமேது, பலனேது? கானல்நீர் தாஹத்தைத் தணிக்குமா? தனது நிழலைக்கொட்டிய தேளின் விஷம் மனிதனைப் பற்றுமா? மேக ஜாலங்கள் ஆகாயத்தை ஸ்பர்சிக்குமா? குடஜலத்தில் காணும் ஸூர்ய ப்ரதி பிம்

பம் ஆதித்யனே யாகுமா? ப்ராந்தியால் தேஹத்தின்கண் புத்தியுபாதியில் தோற்றும் ஆத்மப்ரதிபிம்பமாகிய ஜீவனையே ப்ரஹ்மமெனல் தகுமோ? குடம், நீர், சாயை இவற்றிற் கன்யமாய் வெகு தூரத்தில் ஆகாயத்தில் ஏகமாய் இருந்து இவற்றையும் ப்ரகாசிப்பித்து, தானும் ஸ்வயமாக ப்ரகாசிக்கும் ஸூர்யனைப்போல, "தேஹம், புத்தி, சிதாபாசம் இவற்றை விட்டு, ஹ்ருதயாகாசத்தில் ஏகமாய், இவையாவுமறிந்துகொண்டு நித்யமாய் ஸர்வத்திலும் நிறைந்து அச்சர்வத்தையும் ப்ரகாசிப்பித்து சூக்ஷமமாய் வ்யாபகமாய், ஸத் அஸத்துக்கு விலக்ஷணமாய், உள், வெளியின்றி ஸ்வயம் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும் அகண்ட ஞான ஸ்வரூப நிஜரூப ஆத்மா" வாகிய நான் ப்ராந்தியால்தோன்றிய பவ ஸாகரத்தில் வீழ்ந்து தவிப்பதாய் மொழிவது, ஆகாயத்தாமரை தலையில்தரித்த மலடிமகனும் ஸ்தாணுவிற் புருஷனும் கந்தர்வ நகரில் கிளிஞ்சல் வெள்ளிக்காகக் கலகப்பட்டு கயிறுகிய பாம்பு கடித்து இறக்குமுன் பேய்களானுர்கள் என்னும் கதையளவே உண்மையாகும். இருட்டில் திருடனுய்த் தோன்றினும் தூண் தூணே ஆவதுபோல், அக்ஞான ப்ரமையால் நானுருபமாய்க் காணும் ஆரோபஜகம் அதிஷ்டான ப்ரஹ்மத்துக் கன்யமாகாமல் அச் சச்சிதானந்த ப்ரஹ்மமே ஆவதை அதர்வண வேதம் "இப்ரபஞ்சமனைத்தும் ப்ரஹ்மமே" என்றுகூறிப் பரிஷ்காரமாய் தெரிவிக்கின்றது. பழுதையை ப்ரமையால் பாம்பென்றுனும் புலியென்றுனும் உண்மையில் இவற்றிற்கும் கயிற்றிற்கும் எவ்வித ஸம்பந்தமும் இல்லாததுபோல், ப்ராந்தியால் பல்வேறு ஜகங்களாய்க் காணப்பட்ட எல்லையற்ற ஏகப்ரஹ்மத்துக்கும் ஸத்யம்போல் தோன்றும் அம் மித்யா ஜகஜீவாதிகளுக்கும் வாஸ்தவத்தில் யாதொரு ஸம்பந்தமு மில்லாமை

யால், "ஸர்வ பூதங்களும் என்னில் இல்லை, ஏகனும் யானும் அவற்றில் இல்லை" என்னும் ஈச்வர வாக்கு பெறப்படுகிறது.

ஏகனாகிய என்னைத் தவிர இருப்பது வேறொன்றுமில்லை யென்பதை அறிய அதி யுன்னதமான ப்ரஹ்மக்ஞானமே வேண்டுவதில்லை. சிற்றறிவாலும் அறியலாம். த்ருச்யமாகக் காணும் ஸர்வமும் நினைவிலன்றித் தோன்றாது. த்ருச்ய ஜகாதிகளை நீக்கி நினைவைப் பார்த்தால், நினைவானது ஓர் தனிப்பொருளாய்க்காணவில்லை. ஆதலால், கள்ளனைத் தோற்றியது கட்டையாய் முடிந்தது போல், உண்மைபோற்றோற்றும் நாம ரூபமய உலகம் என்னுடைய நினைவே யாகின்றது. என்னை யகற்றி நினைவு யாதென்று பார்க்கையில், நினைவைக் காணேன். நினைவை நீக்கி 'என்னை' யார் என்று பார்த்தால், 'நான்' ப்ரகாசியா நின்றேன். ஆகவே, ப்ரஹ்மத்தில் மாயை, தங்கத்தில் ஆபரணம், மண்ணில் குடம், ஸமுத்ரத்தில் அலைபோல எனது நினைவும் என்னையன்றி வேறாகாது என்னிலேயே கற்பிதமாவதால், இங்கு வெவ்வேறாகவும் உண்மைபோலவும் தோன்றும் ஸர்வ ஜகஜ்ஜீவாதிகளும் நானே யானேன். என்னைத்தவிர வேறொன்றும் காணாத எனக்கு விசாரமென்னவிருக்கிறது? கயிற்றில் பாம்பும் தூணில் திருடனும் ஒருபோது மில்லாததுபோல் உலகம், உயிர், கடவுள் எனும் மித்யா வித்யாஸங்கள் ஒருவனாகிய என்னுள் எப்போதுமில்லை. மாயா கற்பித ஜன்ம, ஜரா, மரண ஸம்ஸாரவன ஸ்வப்னத்தில் ப்ரமித்தும், ஆரோபித ப்ரபஞ்சத்தை அதிஷ்டான ப்ரஹ்மமாகிய என்னினும் வேறாகக் கருதியும் வருவதாலன்றோ ஜனன மரணாதி துக்கங்கள் உண்மைபோல் தோற்றி வருத்துகின்றன? நோயாளி, மருந்தின் பெயரை உச்சரிப்பதனாலேயே

வ்யாதி நீங்குமா? விவாஹம் செய்துகொள்ள நினைத்த நிமிஷமே குழந்தை பிறக்குமா? "சிவோஹம்" "அஹம் ப்ரஹ்மாஸ்மி," என்று வாக்கால் மாத்திரம்கூறி அனுபவக்ஞானம் அடையாதவனுக்கு ஆத்மஞானம் கிட்டுமா? எங்கெங்கும் தோன்றும் சந்திரனைக் குழந்தைகள் "என் வீட்டுச் சந்த்ரமாமா" "உன் வீட்டுச் சந்த்ரமாமா" என்று பிரித்துக் கூறுவதுபோல், எல்லையற்ற ஏக ஆத்ம ப்ரதிபிம்ப ஜீவர்களால் இயக்கப்படும், (ஒரேநிறமான ரக்தம், அஸ்தி, மாம்ஸாதிகளால் ஆக்கப்பட்ட) தேஹங்களை வேறுவேறாகவும் சாச்வதமாகவும் நினைக்கும் மூடர்கள், அசுத்தம் நிறைந்து அனித்யமானதென்றறிந்தும் கூட தம் தம் சரீரபோஷணையையே முக்யமாய் கவனித்து, கோடிக்கணக்கான ஆருயிர்கள் நாளுக்கொருவேளையும் உண்ணக்கிடைக்காமல் வாடுவதை அறிந்தும் அறியாதது போலிருந்து, வாய் வேதாந்தத்தால் தாம் ப்ரஹ்மக் ஞானம் அடையக் கருதுவது மண் குதிரையேறிக் கடலைக் கடக்கநினைப்பதேயாகும். குழந்தைகள் பட்டினியிருக்கத் தாய் புசிப்பளா? புருஷன்பசியால் வருந்துகையில் உத்தம பத்தினி உண்பளா? நல்ல 'பேர்' எடுப்பதற்காகவோ, கால்கள் அங்கு மிங்கும் நடந்தும் கண்கள் பார்த்தும் கரங்கள் உழைத்தும் பெறும் ருசிகர பதார்த்தங்களை நாவிற்குதவியும் அவற்றால் உதர வெந்தீயை அவித்தும் வருகின்றன? இவ்வவயவங்கள் ஒவ்வொன்றும் தன்னை மறந்து பொதுநன்மைக்காகப் பாடுபடுவதாலன்றோ, தனித்தனி தாமும் ஸுகமடைகின்றன? கை அல்லது காலில் ஓர் பாகத்தை அறுத்து வயிற்றுக்களிக்கவேண்டிய உணவை அதனுள் திருத்தினால் துன்பமேயன்றி ஸுக முண்டாகுமா? சென்ற ஜன்மங்களில் செய்த ஸத்கர்மங்கள், கோரிய ஆசைகள் இவற்றின் பலனாகத் திரண்ட

த்ரவ்யம் பெற்றுள்ளோர், மேலும்மேலும் பொன்னை மேரு வினுயரம் குவிக்கக் கருதாது ஏழைமாந்தரது உதரத் தீயைத் தணிக்கத் தொடங்கினல் அன்றோ, இவர்கள் பல்லாயிரம் ஜன்மங்களுக் கப்புறமாவது ஆத்மஞானம் அடைய இயலும்!

தனது ஈச்வரத்தன்மையை மறக்கச்செய்யும் மஹாமாயையின் முக்ய ப்ரதானியெனத்தகும் பணப்பேயை மஹாத்மாக்கள் பலரும் தூஷிக்கவில்லையா? "ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் நுழையும்; பணக்காரன் பரகதி அடைதல் அதனிலும் அரிது" என்றார் இயேசு கிறிஸ்து நாதர். "குபேரஸம்பத்தைக் கொடுத்து உன்னருளை மறக்கச்செய்வாயோ, ஓ க்ருஷ்ணு" என்றார் குசேலர். "அல்பஸுகங்களை யளித்து ஆதிமூலத்தை மறக்கச் செய்யும் த்ரவ்யாதிகளை ஒருபோதும் வேண்டேன்" என்றனர் ப்ரஹ்லாதனும், நசிகேதுவும். பத்து கோடிக்கதிபதியான பட்டினத்தடிகள் அத்தனையும் துறந்து கோவணுண்டியாய்ப்போனுர். நித்திரையிலிருக்கும் ஸ்ரீராம க்ருஷ்ண பரமஹம்ஸரது உள்ளங்கையில் (தங்கம், வெள்ளி அல்லது தாமிரத்தாலாக்கிய) ஓர் காசை வைத்தால், அக்காசு பட்ட கை விறுவிறுத்துப்போகும்.

சாகும் தருணத்தில் தான் முன்வளர்த்திய மானையே நினைத்ததால் அடுத்த ஜன்மத்தில் மானுகவே பிறந்த ஜட பரத மஹாராஜன் போலவே, மரணகாலத்தில் நினைக்கும் நினைவுகளே அடுத்த ஜன்மங்களைக் கொடுப்பதை அறிந்த இந்தியர், ஆயுள்முழுவதும் அல்பஸுகங்களிலேயே கழித்துவிட்டு ப்ராணன்போகும் வேளையில்மாத்திரம் திடீரென்று "நாராயணு, மாதவா, கோவிந்தா, சம்போமஹாதேவா, ஸாம்ப ஸதாசிவா," என்னும் அற்புதப் பெயர்களில் யாதாவதொன்றையே உறுதியாய் நினைக்கக்கருதி

ணுலும் இயலுமோ? பத்துவருஷம் மூக்குத்தூள்போட்டு அப்யஸித்தவன் திடீரென்று அதனைவிடமுடியுமா? ஆயுள் முழுவதும் செய்த க்ருத்தியங்கள், நினைத்த நினைப்புகள் இவற்றுள் வன்மை மிக்கது (அதாவது காந்தம் இரும்பினை இழுப்பதுபோல் மனதை வசீகரித்து அடக்குவது) எதுவோ, அதுதான் மரணகாலத்தில் முன்வந்து தோன்றும். அருகிலிருப்போர் கேட்கும் கேள்விகளும், உபதேசிக்கும் "நாராயணா! மஹாதேவா" எனும் சொற்களும் செவியில் சுலபமாய் ஏறு. ஆயுள் முழுவதும் இவ்வித தெய்வீகப்பெயர்கள், உருவங்கள், நினைவுகளை, மற்ற உலகப்பொருட்களினும் அதிகமாய் நேசித்தும் பூஜித்தும் வந்திருந்தாலன்றி, இத்தகைய அதி உன்னதமான எண்ணம் ஆவியை இழச்கையில் அடைதல் மிகவும் அரிதாகையால், இவ்வுடற் சட்டையைக் கழற்றுமளவும், பிற உயிர்களின் நலத்தையேகருதி உழைத்தும், ப்ராந்தியால் "வெவ்வேருகக் காணும் இச்சர்வமும் நானே" என்னும் அகண்ட ஆநந்த ஏகாத்மநிலையில், ப்ரஹ்மாத்மைக்ய ஞானமுடைய உத்தம குருவின் அருளால், ஸ்தாபிக்கப் பெற்றும் வரும் அன்பர்கள் எந்த ஜாதி, குலம், நிறம், பால், தேசம், ஆச்ரமம் ஆதிகளில் சேர்ந்தவராயினும் சாச்வதானந்தம் அடைவர் என்பதில் ஸந்தேகமேயில்லை.

ஓம் தத் ஸத்




---

Kesari Printing Works, Madras.



Bhagavan and Bhakthas—June 1930

மயிலாப்பூரில், ப்ராடீஸ் ரோட் நம்பர் 138-ல், உள்ள
ரமணதாஸன் கா. சு. சேஷகிரியிடம்
கிடைக்கும் புத்தகங்கள்.

---

| [தமிழ்] | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| 1. மஹாபாரத வசனம் (முதற்பாதி) 18 பர்வங்களில் முதல் 9 பர்வம் உள்ளது. (18 நாள் போருடன் முடிவது) .... .... | 1 | 0 | 0 |
| 2. இஹபர ஸாகம் (அல்லது) 50 மஹாத்மாக்கள் ஞானிகளின் மொழிகள் .... | 0 | 8 | 0 |
| 3. ஈச்வர லீலை (அல்லது) சிவபிரானது 64 திருவிளையாடற் சுருக்கம் .... .... | 0 | 8 | 0 |
| 4. எல்லாம் நானே (இரண்டாம் பதிப்பு). ரமண பகவானது திருவுருவப் படமும் உள்ளது | 0 | 2 | 0 |
| 5. உதயணன் கதை (ஆறு காண்டங்களும் அடங்கியது) .... .... .... | 0 | 5 | 0 |
| 6. ஸ்ரீ ரமண ஸ்துதி தசகம் (தமிழ்); Including '*Some Experiences*' and *A few verses* (in English) on *Bhagavan Sri Ramana* of Tiruvannamalai ... | 0 | 5 | 0 |
| 7. The "Maha Bharatha" (in English) (The first ten Parvas in) Part I ... | 0 | 10 | 0 |

*For books mentioned above, please apply to*

RAMANADASA K. S. SESHAGIRI,

138, Brodies Road, *Mylapore* (Madras.)